# கொங்கு





கல்வெட்டுப் பயிற்சிப் பாசறை

நிறைவு விழாச் சிறப்பிதழ்

ஆனி 2002 [ஜுன் 1971] 25 காசு



நன்றி : தென்னகம்

தமிழ் வாழத் தான் வாழும்
தமிழகத்து முதல்வரே, வாழ்க வென
வணங்கி வாழ்த்துகிறது கொங்கு.

( கலைஞரின் 48ஆவது பிறந்த நாள் : 3-6-71 )

மு. கருணாநிதி
முதலமைச்சர்

அரசு தலைமைச் செயலகம்,
தமிழ் நாடு.
சென்னை – 9.
15-5-71.

தமிழக வரலாறு மிகத் தொன்மையானது என்பதிலும், தமிழர் நாகரிகம் உலக நாகரிகத்தில் தனிச்சிறப்பு வாய்ந்தது என்பதிலும் எவ்வித ஐயமும் இல்லை. ஆனால் இதற்கான சான்றுகளை அறிவியல் அடிப்படையில் மறுக்க முடியாத அளவில் தொகுத்துத் தருவது இன்றியமையாததாகும்.

வரலாற்றுக் கண்ணோட்டத்தில் புதையுண்ட செல்வம் போல் நாட்டில் பல கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றில் சொல்லப் பட்டுள்ள வரலாற்றுக் குறிப்புகளை உள்ளபடி எடுத்துக்காட்ட பயிற்சிப் பாசறை நடத்திய தொல்லியல் துறையின் முயற்சி போற்றத்தக்கது.

இப்பணியினை மக்களுக்கு விரித்துக்கூற 'கொங்கு' திங்க ளிதழ் சிறப்பு மலர் வெளியிடுவதைத் தமிழகம் உவகையோடு வர வேற்கும் – இது அரிய புதிய முயற்சி என்பதால் !

தமிழர் வரலாற்றுக்குச் சீரிய ஆதாரங்கள் தேடித்தரும் நன் முயற்சிகளுக்கு என் உளமார்ந்த வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

(ஒப்பம்) மு. கருணாநிதி.

ம. பொ. சிவஞானம்

1/29, இருசப்ப கிராமணி தெரு,
சென்னை–5

22-5-71.

கொங்கு திங்கள் இதழ் தொல் பொருள் ஆய்வுத்துறையினர் நடத்தி வரும் 'கல்வெட்டுப் பயிற்சி முகாம்' முடிவின்போது சிறப்பு மலர் வெளியிட இருப்பதறிந்து மகிழ்ச்சியடைகிறேன். மலர் மணம் உடையதாக அமைய மனமுவந்து வாழ்த்துகிறேன். பயிற்சி முகாம் தொடங்கியதிலிருந்து முடிந்தது வரையில் உள்ள நிகழ்ச்சிகளின் சுருக்கமும் மலரில் இடம் பெறும் என்று நம்புகிறேன்.

கல்வெட்டில் பொறிக்கப்பட்டவையெல்லாம் ஐயத்திற்கிடமற்ற வரலாற்று உண்மைகள் என்று நம்புவதற்கில்லை. மன்னர்களின், மதவாதிகளின் ஒருதலைப் பட்ட கருத்துக்களே கல்வெட்டுக்களில் பெரும்பாலும் காணப்படுகின்றன. ஆழ்ந்த ஆராய்ச்சிக்குப்பின் இதனை நான் கூறுகின்றேன். ஆகவே கல்வெட்டு வகுப்பில் பயின்று தேறியவர்கள் இதை நினைவில் வைத்துத் தங்கள் படிப்பைப் பயன் படுத்த வேண்டும்.

(ஒப்பம்) ம. பொ. சிவஞானம்.



**இரா. நாகசாமி, M.A.**
இயக்குநர்,
தொல்பொருள் ஆய்வுத்துறை,
சென்னை-28.
22-5-71.

கொங்கு திங்களிதழ் சிறப்பாக வருகின்றது. அது இத்திங்கள் சிறப்பிதழாக மணம் பெருக மலர்கிறது. தமிழ் நாடு அரசு, தொல்லெழுத்தையும் வரலாற்றையும் மக்கள் அனைவரும் எளிதில் அறிய வகை செய்ய ஆவன செய்து வருகிறது. கல்வித்துறை அமைச்சர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் கல்வெட்டு களையும் வரலாற்றைவும் அனைவரும் படிக்கும் வண்ணம் வகை செய்ய ஆவல் கொண்டு இட்ட ஆணையின் அடிப்படையில் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை கல்வெட்டுப் பயிற்சி பாசறையை நடத்தும் பணியை மேற்கொண்டுள்ளது. இதில் பங்கு பெற்றோரின் ஆர்வம் அளவிறந்தது.

இது ஒரு தொடக்கமே. இன்னம் ஆற்றவேண்டிய பணி எவ்வளவோ உள்ளது. தமிழக வரலாறு அறிவியலின் அடிப்படையில் அறிய சான்றுகளாக அமைபவை கல்வெட்டுகள். அவைகளைப் படித்து, வரலாற்றைப்பகுத்து, பண்பை வளர்க்க எவ்வளவோ இளைஞர்களின் தொண்டு தேவை. அதில் ஒரு சிறப்பான பங்கை "கொங்கு" மேற்கொண்டுள்ளது. வளர்க அதன் பணி.

(ஒப்பம்) *இரா. நாகசாமி.*

# அழைப்பு மடல்

புயல் வாய்த்து வளம் பெருக, பொய்யாத வாய்மொழியின் புகழ்சிறக்க,
இன்னலெலாம் இல்லையென மறைப்தொழிய,
இன்னமுதச் செந்தமிழின் இயல்ஓங்க
நல்லோர்க்கும் இல்லோர்க்கும் துணை நின்று,
கலை பயிலும்வல்லோர்க்கும் கைகொடுத்து,
தொன்னிலத்தின் கிழமை ஏற்று,
தமிழ்த்தாயின் தாளிணையே முடிபுனைந்து
மும்முரசும் நிசைஒலிப்பக் கோலோச்சும் கலை அண்ணல்,
மாண்புமிகு மு. கருணாநிதி அவர்கட்கு வெற்றியாண்டு
இரண்டாவதின் எதிர் தலைத்தாவது
வையாசித் திங்கள், நாள் 12, புதன் எனும் நன்னாளில்
(26-5-71) இரவு எட்டு மணியளவில்
ஜயங்கொண்ட சோழமண்டலத்துப் புலியூர்க் கோட்டமான
குலோத்துங்கசோழ வளநாட்டு எழுமூர் நாட்டு எழுமூரில்
பேரரசன் அசோகனது பெயர் பெற்று விளங்குகின்ற உணவகத்து
வெளிமுன்றில்,
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை நடாத்திய
கல்வெட்டுப் பயிற்சிப் பாசறை நிறைவுபெறும் விழாவினிற்கு
மக்களது உடல் வளமும் உயிர் நலமும் பேணுகின்ற அமைச்சுதனைக்
கோலோச்சும்
மாண்புமிகு க. அன்பழகன் அவர்கள் அன்புடனே தலைமை
ஏற்றுப்
பாசறையில் பாங்குடனே பயிற்சி பெற்ற பண்பினர்க்குச் சான்று
இதழ் நல்கிடவே இசைந்தமையின்
அன்புடையீர் வருவீர் என, அழைப்புவிடும் பேறு பெற்றேன்,
தொல்பொருளாய்வுத்துறை இயக்குநன் இரா. நாகசாமி யென்.
நலம் சிறக்க.

// கொங்கு

ஆசிரியர் : புலவர் செ. இராசு

சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே.

தேனீ 1 (15-6-71) தேனடை 6

# வணக்கம்

நிலவில் நடப்பது அறிவியல் சாதனை. அடைந்த விவரத்தை நினைவு கூர்வது வரலாறு. பழைய வரலாற்றை அறிந்து கொள்ளவும் பெரு முயற்சி தேவை. அந்த அடிப்படையில் வரலாற்றுத் தெளிவிற்கு வழிவகுக்கும் பழைய எழுத்துக்களைப் படிக்கும் முயற்சிக்கு உறுதுணையாக ஏற்படுத்தப்பட்ட "கல்வெட்டுப் பயிற்சிப் பாசறை" நிறைவுறும் நன்னாளில் 'கொங்கு' சிறப்பு மலர் வெளியிடுவதில் பெருமை கொள்கிறோம்.

மலருக்கு வாழ்த்துச் செய்தி அனுப்பிய மாண்புமிகு தமிழக முதல்வர் கலைஞர் அவர்கட்கு நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம். கல்வெட்டுக்கள் படி எடுப்பது பற்றிக் கலைஞரின் கடைக் கண் பார்வைக்காகக் கொங்கு இரண்டு பரிந்துரைகளைப் படைக்கின்றது (பக்கம் 143). அதே போல சென்னை மாவட்ட நூலக ஆணைக்குழுத் தலைவர் திரு. ம. பொ. சிவஞானம் அவர்களுக்கு மூன்றாவது பரிந்துரையை வழங்குகின்றது.

மலர் சிறக்க ஒளிவரைகள் (Photographs) தந்துதவிய தொல்லியல் துறையினருக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்.

பாசறையில் பங்கு கொண்ட தமிழாசிரியர்களும், வரலாற்றாசிரியர்களும், பல பலவழிகளில் முயன்று தாம் பெற்ற பயிற்சியை மேலும் மேலும் வளர்த்துக்கொண்டு புதிய, புதிய செய்திகளைத் தமிழ் கூறு நல்லுலகிற்கு அளிக்க வேண்டுமென வாழ்த்துகிறோம்.

—ஆசிரியர்.

# தொன்மை வரலாறு

நாவலர் இரா. நெடுஞ்செழியன்

தமிழறிவு - வரலாற்றறிவு என்ற இரண்டு பகுதிகளோடு கல்வெட்டு ஆராய்ச்சி அறிவு ஒன்றாகக் கலக்கும் போது இறந்த காலநிகழ்ச்சிகள் நன்கு தெளிவாக்கப்படுகின்றன. பழம் பெரும் மன்னர்களது வரலாற்றுச் சிறப்புக்களைக் குறிக்கும் பலவற்றை நாம் மேல்நாட்டாரைப் போல் போற்றிப் பாதுகாக்காமல் இருந்துவிட்டோம். அதனால் தான் நம் வரலாறை நாம் சரிவர அறியாமல் இருக்கிறோம். ஆனால் மேல்நாட்டார். ஒவ்வொரு சிறு நிகழ்ச்சிகளுக்குச் கூட நினைவுச் சின்னம் எழுப்பிப் பாதுகாக்கிறார்கள்.



கல்வெட்டு ஆராய்ச்சி அறிஞர்கள் இதுவரை கண்டறிந்த வரை 80 ஆயிரம் கல்வெட்டுக்கள் உள்ளன வென்று கணக்கிடப்பட்டுள்ளன. இவற்றில் 25 ஆயிரம் கல்வெட்டுகள்படி எடுக்கப்பட்டுள்ளன. இவற்றுள் ஆறாயிரம் கல்வெட்டுக்கள்தான் ஆராய்ச்சிக்குத் தகுதியாக குறிப்புகளோடு வெளியிடப்பட்டிருக்கின்றன 80 ஆயிரம் கல்வெட்டுகள் குறிப்புகளோடு வெளியிடப்பட்டு தமிழக வரலாறு எழுதப்படுமேயானால் நம் நாட்டு வரலாறு எத்துணைச் செம்மையாக இருக்கும் என்பதை நாமேஒருவாறுயூகித்து அறிந்து கொள்ளலாம்.

நான் இங்கிலாந்து சென்றிருந்தபொது அங்கேயுள்ள பாராளு மன்றத்தைக் காட்டினார்கள். இங்கிலாந்துப் பாராளு மன்றம் உலகப் பாராளு மன்றத்தின் தாய் என்று அழைக்கப்படுகிறது. அந்தப் பாராளு மன்றத்தை யொட்டி ஜனநாயகம் வளர்த்த ஒவ்வொரு அரசர் அமர்ந்த இடத்தையும் செப்பேடுகளில் பொறித்து வைத்துக் காட்டினார்கள்.

எப்போதோ ஓர் மன்னன் கல்லின் மீது அமர்ந்து ஆட்சிப் பொறுப்பை ஏற்றானாம். அந்தக் கல்லை சிம்மாசனத்திற்குக் கீழே பாதுகாப்பாக வைத்துப் போற்றுகிறார்கள்.

## தாய்க்குத் தாய்

இங்கிலாந்து பாராளுமன்றம் தாய் என்றால் தமிழகத்தைத் தாய்க்குத்தாய் என்று சொல்ல வேண்டும். அங்கே இங்கிலாந்து நாட்டில் மட்டும்தான் பாராளுமன்ற முறை. ஆனல் தமிழ் நாட்டில் ஊர்தோறும் ஜனநாயக முறையில் அமைந்த குடவோலை முறை இருந்தது.

அன்றிருந்த ஊர்ச் சபைகளுக்கு உறுப்பினர்கள் தேர்ந்தெடுக் கப்பட்டார்கள். அந்த உறுப்பினர்களுக்கு வேண்டிய தகுதிகளும் வரையறுக்கப்பட்டிருந்தன. உறுப்பினர் ஆவதற்குத் தகுதியில்லா தவர்கள் யார் யார் என்பதற்கும் வரையறை இருந்தது.

உத்திரமேரூர்ச் சாசனத்தில் இதுபற்றிய குறிப்பு இருக்கிறது. கையூட்டு வாங்குவோர், சொந்த வீடு- நிலம் இல்லாதோர் இவை போன்ற இன்னும் சில விதிகளும் வரையறுக்கப்பட்டு அவை இல்லாதோர் உறுப்பினராவதற்குத் தகுதி கிடையாது என்று விதிமுறை வகுத்துள்ளனர். இது உத்திரமேரூர்ச் சாசனத்தில் இருக்கிறது.

குடவோலை முறை என்பது தமிழ் நாட்டில் தொன்று தொட்டு இருந்து வந்தது. இது இராஜராஜ சோழன் காலத்தில் வந்த தென்று சிலர் சொல்வர். இது தவறு. சங்க இலக்கியக் காலத்தி லேயே குடவோலை முறை இருந்தது என்பதற்கு சான்றிருக்கிறது.

போர்க்களத்தில் மாண்டவனுடைய வயிறு பானை போல் ஊதி விட்டது. அதைக் கழுகு தன் மூக்கால் கொத்தி உள்ளேயிருக்கிற குடலை எடுத்துப் போட்டதாம். அது எப்படி யிருக்கிறதென்றால் குடத்திலுள்ள ஓலையை ஒவ்வொன்றாக எடுத்து வெளியே போடுவது போன்றிருந்ததாம். இப்படிப்பட்ட உவமை தரும் இலக்கியத்திலிருந்து தான் நாம் நமது வரலாற்றை ஓரளவு உணர முடிகிறது. சங்க காலத்திற்கு முன்பே குடவோலை முறை இருந்தற்குச் சான்றுகள் இருக்கின்றன.

## கோயில் சுவர்களில் வரலாறு

திருவரங்கநாதர் கோயிலுக்கு அண்மையில் நான் சென் றிருந்த போது விஜய நகர மன்னர்கள் மராட்டிய மன்னர்கள் வரலாறு அங்குள்ள கோயில் சுவர்களில் பொறிக்கப்பட்டிருந்தது. கண்டேன் கோயில் சுவர்களெல்லாம் பழங்காலத்தில் வரலாற்றுக் களஞ்சியங்களாக விளங்கியிருக்கின்றன.

தொல்பொருள் கல்வெட்டு ஆராய்ச்சி மூலம் தமிழக வர லாற்றை தெள்ளத் தெளிவாக விளக்க இத்துறை முயற்சியை மென்மேலும் மேற்கொள்ளவேண்டும்.

---

5-5-71 அன்று நடைபெற்ற கல்வெட்டுப் பயிற்சிப் பாசறை தொடக்க விழாச் சொற்பொழிவு. நன்றி : முரசொலி.

# கல்வெட்டுப் பயிற்சிப் பாசறை

உறையாற்றிய் பெருமக்கள்

1. டாக்டர் ந. சஞ்சீவி
2. பேராசிரியர். F. குரோ
3. திரு. க.த. திருநாவுக்கரசு
4. ,, H. சர்க்கார்
5. ,, ஐ. மகாதேவன்
6. டாக்டர் S.T. சத்தியமூர்த்தி
7. திரு. நம்பி ஆருரன்
8. ,, மயிலை சீனி. வேங்கடசாமி
9. Dr. ஆஸ்கோ பர்ப்போலா
10. திரு. நடன. காசிநாதன்
11. ,, அப்துல் மஜீத்
12. ,, தாமோதரன்
13. ,, அரிகரன்
14. ,, சந்திரமூர்த்தி
15. ,, இரா. நாகசாமி.

## பல்லவர் காலக் கருத்தரங்கு (23-5-71)

தலைவர்கள் : இலக்கியம் : திரு. ந. சஞ்சீவி

சமயம் : திரு. கா: அப்பாத்துரை

கலை, வரலாறு : திரு. அ. மு. பரமசிவானந்தம்

புதுவை பிரெஞ்சிந்திய ஆராய்ச்சி நிறுவனத்தின் சார்பில்
திரு. பட்டாபிராமன் கலந்து கொண்டார்.

# கல்வெட்டுப் பயிற்சியின் நோக்கமும் பயனும்

இந்திய நாட்டின் வரலாறு எழுதும் போதெல்லாம் மேலை நாட்டினராயினும் சரி, இந்திய நாட்டினராயினும் சரி, சென்ற நூற்றுண்டின் முற் பகுதிவரை தமிழக வரலாறு பற்றி மிகக் குறை வாகவே குறிப்பிட்டு வந்துள்ளனர். அதற்குக் காரணம் தமிழக வரலாறு பற்றி அறிந்து கொள்வதற்கு பெரும் கருவூலங்களாகத் திகழும் இலக்கியங்களையும், கல்வெட்டுக்களையும் அவர்கள் செம் மையாக அறியாமலிருந்ததுதான். சென்ற நூற்றுண்டின் இறுதி யில்தான் மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் அவர்கள், எங்கெங்கோ ஓலைச் சுவடிகளாகச் சிதறிக் கிடந்த தமிழிலக்கியங்களையெல்லாம் ஆராய்ந்து புத்தகங்களாக அச்சிட்டு தவினுர்கள். அதன் பின்னர் இவ்விருபதாம் நூற்றுண்டின் தொடக் கத்தில் மேதகு கனகசபை பிள்ளை என்பார், அவ்விலக்கியங்களின் துணைக்கொண்டு '1800 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த தமிழர் கள்' என்ற ஒரு புத்தகத்தை ஆங்கிலத்தில் எழுதி, தமிழிலக்கியங் கள், தமிழ் மன்னர்களைப் பற்றியும் தமிழ்ச் சமுதாயத்தின் தொன் மை பற்றியும் வெளியுலகுக்கு உணர்த்தினுர். அந்த சமயத்தில் தமிழகக் கோயில்களிலும் மலைப்பகுதிகளிலும் கல்வெட்டுகள் ஏராளமாகக் கிடைக்கின்றன, அவை தாம் பொறிக்கப்பெற்ற காலங்களில் வாழ்ந்த மன்னர்களின் வரலாற்றையும் 'சமுதாயச் சிறப்பியல்புகளையும் தெளிவாகக் கூறுகின்றன என்பதும் உணரப் பட்டது. பின்னர் இலக்கியம், கல்வெட்டு இன்ன பிற சான்றுகள் துணை கொண்டு வரலாற்றைச் செம்மையாக எழுதத் தொடங் கினர். நீல கண்ட சாஸ்திரி அவர்களின் "சோழர்கள்" சதாசிவப் பண்டாரத்தாரின் "பிற்காலச் சோழர்கள்" போன்றன அவை. கல்வெட்டுக்களால் வரலாறு தெளிவடையத் தொடங்கியது.

அக்கல்வெட்டுக்களோ பண்டைத் தாமிழி முதல், வட் டெழுத்து, கிரந்தம், நாகரி போலப் பலவகை எழுத்துக்களில் தமிழகம் முழுவதும் பரந்து கிடைக்கின்றன. அவ்வெழுத்துக்களை படிக்கும் புலமை கொண்டோர் மிகச் சிலரே. மிகச் சிலர் என்பதை விட "மிக மிகச் சிலர்" எனலாம்.

இது பெருங் குறை. இப்பெருங்குறை நீக்க விழைந்த மாண்பு மிகு கல்வி அமைச்சர் நாவலர் அவர்களின் பெருவிருப்பத்தின் காரணமாக கல்லெழுத்துக்களைப் படிப்போர் தொகையைக்

கூட்டும் எண்ணத்துடன் இப்பயிற்சிப் பாசறை தொடங்கப் பட்டுள்ளது. ஆசிரியர் ஒருவர் அறிந்தால் ஆண்டு தோறும் பல மாணவர்கள் அறிந்து கொள்ள வாய்ப்புள்ளதால் ஆசிரியர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

ஒரு வாரம் எழுத்துப் பயிற்சியும், ஒரு வாரம் வரலாற்றுச் செய்திகளும் போதிக்கப்பட்டுள்ளன. ஒரு வாரம் வரலாற்றுச் சிறப்புள்ள ஊர்களுக்கும், கோயில்களுக்கும் அழைத்துச் செல்லப் பட்டு, நேர்முகப் பயிற்சி அளிக்கப்பட்டுள்ளது.

பயிற்சியால், புதிய கல்வெட்டுக்கள் பல காணும் வாய்ப்பு உள்ளது. ஏற்கனவே அச்சாகியுள்ள கல்வெட்டுக்களில் மூலத்திற்கும் அச்சிற்கும் உள்ள வேறுபாடு களையப்படும் வாய்ப்பு உள்ளது. புதிய வரலாற்று உண்மைகள் பல கண்டு பிடிக்கப்படும் வாய்ப்பு உள்ளது. மொத்தத்தில் தமிழக வரலாறு தெளிவடைவது திண்ணம்.

*

நடன. காசிநாதன்

---

## மார்ப்பிடுகு பெருங்கிணறு

திருச்சிக்கு வடக்கே 12 மைல் தொலைவில் உள்ள திருவெள்ளறை என்ற ஊரில் ஸ்வஸ்திக வடிவக் கிணறு ஒன்று உள்ளது. பல்லவன் தந்திவர்மன் நான்காம் ஆட்சியாண்டில் (கி.பி. 800) தோண்டப்பட்டது. அதை வெட்டியவன் ஆலம்பாக்கம் விசய நல்லூழான் தம்பி கம்பன் அரையன் என்பவன். அதன் பெயர் ''மார்ப்பிடுகு பெருங்கிணறு'' என்று குறிக்கப்பட்டுள்ளது. மார்ப்பிடுகு என்பது பல்லவர்களின் பெயர்; 'பேரிடி'' என்று பொருள்.

போசாள மன்னன் வீரராமநாதன் காலத்தில், குடந்தை வாணிபன் ''உய்ய நெறி காட்டினுன்'' என்பவனால் திருத்தி அமைக்கப்பட்டதாக இன்னொரு கல்வெட்டு கூறுகிறது.

இதன் வரலாற்றுச் சிறப்பு குறித்து, இதைத் தமிழ் நாடு அரசுத் தொல்லியல் துறை பாதுகாத்து வருகிறது.

—கு. தாமோதரன்

# மாமல்லை

•

அமரர் கல்கி அவர்களின் '*சிவகாமியின் சபதம்*' பேரிலக்கியப் படைப்பு. ஆடல் நாயகி சிவகாமியும், அருங்கலை விநோதன் மாமல்லனும், நமது கண் முன்னர் நடமாடும் பாத்திரங்களாகச் செய்தார். ஆயனரின் கைவண்ணம் மாமல்லையாக மலர்ந்த பாங்கும், சிற்றுளி மோதும் கல் கல் ஒலியும் என்றும் மறக்க இயலாதவை.

கல்கி அமரராகி விட்டார். அவர் காலத்தில் மாமல்லைச் சிற்பங்களை வெட்டுவித்தவன் மகேந்திரவர்மனின் (600-630) மகன் நரசிம்மவர்மன் (630-668) என்றே ஆராய்ச்சியாளர்கள் நம்பி வந்தனர். காலப்போக்கில் புதிய உண்மைகள் புலப்பட்டு, முடிவை மாற்றிக் கொள்ள வேண்டியதாயிற்று. மகேந்திர வர்மனின் மகன் நரசிம்மவர்மன், அவன் பேரனின் மகன் இரண்டாம் நரசிம்மவர்மன் (700-728). இராஜசிம்மன் என்றும் அழைக்கப்படுவான். இவனுக்கும் மாமல்லன் என்ற பட்டப் பெயர் உண்டு. அவனுடைய பிற பட்டப்பெயர்கள் அத்யந்தகாமன், சிவ சூடாமணி என்பன. தண்டியலங்காலம் எழுதிய புலவர் தண்டி இவன் காலத்தவர்.

மாமல்லைச் சிற்பங்களை வெட்டுவித்தன் முதலாம் நரசிம்மனின் கொள்ளுப் பேரனை ராஜசிம்மனே என்று ஆராய்ந்து கண்டு பிடித்தவர் இரா. நாகசாமி அவர்கள். ஆராய்ச்சியின் முழுவிவரம் ''மாமல்லை'' என்ற நூலுள் அடங்கியுள்ளது. இது தமிழ் நாடு அரசின் தொல்லியல் துறை வெளியீடு. ரு. 1-50 விலையில் கிடைக்கும்.

*

---

# தாமிழி

தமிழ் நாட்டில் கண்டுபிடிக்கப்பட்ட பழைய எழுத்துக்கள் ''தாமிழி'' எழுத்துக்கள் என்று அழைக்கப்படுகின்றன. அசோகன் காலத்து 'பிராமி' எழுத்துக்கள் இதைப் போலவே இருக்கும்.

தொல்காப்பியர் கூறும் இலக்கணம் இத்தாமிழி எழுத்துக்களுக்கே பொருந்துவதைக் கொஞ்சம், கொஞ்சமாகக் கண்டு வருகின்றனர், ஆராய்ச்சியாளர்கள்.

---

# தொல்லியல் துறை-ஓர் அறிமுகம்

தொன்மை வரலாற்றுச் சின்னங்கள் மலிந்த இடம் தமிழ்நாடு, அதன் சிறப்பு குறித்து 1961 ஆம் ஆண்டு தமிழ் நாடு தொல்லியல் துறை அமைக்கப்பட்டது. அதை இளமைத் துடிப்பும், செயல் திறனும் கொண்ட குழு இயக்கி வருகிறது.

தற்போதைய இயக்குநர் திரு. இரா. நாகசாமி அவர்கள் பல தொல்லியல் ஆய்வுகளில் பங்கு கொண்டு அனுபவம் பெற்றவர். பல தடவை வெளி நாடு சென்று புத்தறிவு பெற்றவர். மாமல்லையை வெட்டுவித்தவன் இராஜசிம்மனே என்ற அவரது கண்டு பிடிப்பு அனைத்துலகப் புகழைப் பெற்றது.

அகழ்வாய்வுகள் நடத்துவதும், கல்வெட்டுகள் படி எடுத்து அச்சிடுவதும், புகழ் மிக்க பழைய கோயில்களைப் பாதுகாப்பதும் இவர்களது பணி. இவருக்கு உதவியாக திருவாளர்கள் நடன. காசிநாதன் (கல்வெட்டாய்வாளர்), அப்துல் மஜீத் (அகழ்வாய் வாளர்), கு. தாமோதரன், ச. அரிகரன், மா. சந்திரமூர்த்தி (கல்வெட்டாய்வாளர்கள்) பணியாற்றுகின்றனர். அனைவரும் M.A. பட்டம் பெற்ற இளைஞர்கள்.

பாதுகாப்புப் பிரிவு (Conservation) ஒரு உதவிப் பொறியாளாரின் கீழ் திறம்படப் பணியாற்றுகிறது. உதவிப் பொறியாளருக்கு உதவியாக G. சுந்தரேசன், V. நாராயணசாமி, கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் பணியாற்றுகின்றனர்.

அரிய நூல்கள் கொண்ட நூலகமும், புதிய கருவிகள் பல கொண்ட ஒளிவரை (Photograph) பகுதியும், அச்சகமும் தொல்லியல் துறைக்கு புகழ் தேடித் தருபவை. பன்னாட்டு பழமைச் சிறப்புகள் காட்டும், படச் சுருள்களும், வாங்கி வைக்கப் பட்டுள்ளன.

நடை முறை அலுவல்களைக் கவனிக்க ஆற்றல் மிக்க மேலாளர் ஒருவரின் கீழ், மூன்று தட்டச்சர்களும், நான்கு எழுத்தர்களும், சில ஏவலர்களும் பணிபுரிகின்றனர்.

தொல்லியல் துறையினர் இக்குறுகிய காலத்தில் சென்னை கல் வெட்டுக் கருத்தரங்கு, மதுரை வரலாற்றுக் கருத்தரங்கு, பல்லவர் காலக் கருத்தரங்கு, போன்றவைகளை நடத்தியுள்ளனர். சென்னை

---

# வட்டெழுத்து

*தமிழக கல்வெட்டுக்களில் ஒரு பகுதி வட்டெழுத்துக் களால் ஆனவை. தாமிழி எழுத்துக்களின் உருமாற்றமே வட்டெழுத்துக்கள் என்பதற்கான கல்வெட்டுச் சான்றுகள் நிறையக் கிடைத்துள்ளன. தமிழ்ப் புலவர்களில் சிலர் இன்னும் இக் கருத்தை ஒப்புக் கொள்ளத் தயங்குகின்றனர்.*

மாவட்டக் கல்வெட்டுக்களைப் படி எடுத்து வெளியிட்டுள்ளனர். பல பொருட்காட்சிகள் நடத்தியுள்ளனர். அரிய நூல்கள் பலவற்றை வெளிக் கொணர்ந்துள்ளனர். கூழம் பந்தல் கங்கைகொண்ட சோழீச்சரம், சொக்கீசுவரர் கோயில் போன்ற பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டுள்ளனர். புகழியூர் கல்வெட்டு, திருவெள்ளறைக் கிணற்றுக் கல்வெட்டு போன்றவற்றைப் பாதுகாக்கின்றனர். கட்டபொம்மன் அரண்மனை, கொற்கை, பல்லவமேடு ஆகிய இடங்களில் அகழ்வாராய்ச்சி செய்துள்ளனர்.

தமிழக அரசின் ஒத்துழைப்போடு பல நல்ல செயல்களை மேற்கொண்டு தமிழ் நாட்டின் பழைய வரலாற்றை வெளிப்படுத்துவதில் முனைந்து நிற்கும் தொல்லியல் துறைக்கு நமது பாராட்டுகள்.

— நமது நிருபர்



மாமல்லை
தவம் செய்வது, பார்த்தனா? பகீரதனா?

கல்வெட்டுகள்

# படியெடுக்கும் முறை

—மா. சந்திரமூர்த்தி

இக்கட்டுரையில் கல்வெட்டுப்படியெடுக்கத் தேவையான கருவிகளைப் பற்றியும், படியெடுக்கும் முறையைப் பற்றியும் காண்போம்.

## தேவையான கருவிகளும், பொருள்களும் :—

1. கல்வெட்டுப் படித்தாள் (Estampage Paper). 2. அடிக்கும் மட்டை (பெரியது) (Beating Brush (big). 3. அடிக்கும் மட்டை (சிறியது) (Beating Brush (Small). 4. இரும்பு மட்டை (Iron Brush). 5. நார் மட்டை (Coir Brush). 6. மை ஒத்தி (பெரியது) (Dabbler (Big). 7. மை ஒத்தி (சிறியது) (Dabbler Small). 8. சுரண்டும் கத்தி (Scraping knife). 9. பீங்கான் தட்டு (Ceramic Plate). 10. வாளி (Bucket). 11. எழுதுகோல் (Copying Pencil). 12. மை (Ink). 13. நீர் உறிஞ்சி (Sponge).

## மை தயாரிக்கும் முறை :—

கல்வெட்டுகள் படியெடுக்க உபயோகிக்கும் மை தனித்தன்மை கொண்டது. விளக்கு மை (Lamp black), தந்தத்தின் கரி (Ivory black), இந்தியன் மை (Indian Ink), கோந்து (Gum). இவைகளைக் குறிப்பிட்ட அளவு எடுத்து கலந்து, தேவையான அளவுக்கு இந்தியன் மையை ஊற்றி நன்ருக மெழுகு போன்று அரைத்தல் வேண்டும். அதை ஒரு டப்பாவில் எடுத்து வைத்துக்கொள்ள வேண்டும்.

## கல்வெட்டுப் படியெடுக்கும் முறை :—

நாம் தேவையான கருவிகளை எடுத்துக்கொண்டு வரலாற்றுச் சிறப்புப் பெற்ற கோயிலை அடைகிறேம். அந்த கோயிலின் அடித்தளம் (Basement) சுற்றுச்சுவர் (Compound Wall) உள்மண்டபம், (Inner Mandapa), தூண் (Pillar) போன்ற பகுதியில் கல்வெட்டுகளைக் கண்டு படியெடுக்க நம்மைத் தயார்படுத்திக் கொள்ள வேண்டும்.

கல்வெட்டு உள்ள பகுதிகள் சுண்ணும்பு காரையால் மூடப்பட்டிருந்தால் இரும்பு மட்டையால் சுரண்டி விட்டு சுத்தப்படுத்த வேண்டும். பிறகு சுரண்டும் கத்தியைக்கொண்டு எழுத்துக்களின்

பள்ளப்பகுதிகளில் படிந்துள்ள தேவையற்றவைகளை சுரண்டி யெடுக்கவேண்டும். சுரண்டியபின் தண்ணீரை ஊற்றி கல்வெட்டை கழுவி சுத்தப்படுத்த வேண்டும். அடுத்து நீர் ஒத்தியின் துணை கொண்டு கல்வெட்டுகளின் மேல் உள்ள அதிகமான நீரை உறிஞ்சி விட வேண்டும்.

கற்பாறையில், பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளின் அமைப்புக்கேற்ப படித்தாள்களை வெட்டிக்கொண்டு, அத்தாளை வாளியில் உள்ள நீரில் நனைத்து எடுத்து கல்வெட்டுகளின் மேல் படியவைக்கவேண்டும். படியவைத்த தாளின் மேல் தேவையற்ற நீரை உறிஞ்சான் கொண்டு உறிஞ்சிவிட வேண்டும். பிறகு அடிக்கும் மட்டையால் படியவைத்த தாளின் மேல் நன்றாக, ஆனால் தாள் கிழிந்துவிடாத அளவிற்கு அடிக்கவேண்டும். பிறகு முறையாக தயாரிக்கப்பட்ட மையை, மை ஒத்தியால் எடுத்துக்கொண்டு கல்வெட்டு மேல் பகுதியில் சமமாக ஒத்தவேண்டும். முடிவில் எழுத்தல்லா மேற் பகுதி கருமையாகவும், எழுத்தின் பள்ளம் வெண்மையாகவும் காட்சியளிக்கும்.

பிறகு எழுத்துக்கள் பதிந்த தாளை மடித்து மெதுவாகக் கல்லை விட்டு எடுக்கவேண்டும். படியெடுத்தவுடன் கல்வெட்டுப் படியின் தலைப்புப் பகுதியில் பின் புற மூலையில் எழுதுகோலால், மாவட்டம், வட்டம், ஊர், கோயிலின் பெயர், பகுதி ஆகியவை பற்றி எழுத வேண்டும். அதன் பிறகு எடுத்த படியை வெய்யிலில் சற்று காய வைக்க வேண்டும்.

படியெடுக்கும் முறையை நேரில் கண்டால் தான் புரியும். பார்த்தபின், படிஎடுக்கும் முறை மறந்து விடாமல் இருக்க இக் குறிப்பு உதவும்.



---

## தொல்லியல்

(Department of Archeology) என்பதற்கு "தொல்பொருள் ஆய்வுத் துறை" என்ற சொல் பயன்படுகிறது. Archeo= தொன்மை logy=இயல். தொல்லியல் என்ற சொல்லே பொருந்தும்.

தொல்லியலில் தொல் பொருளை ஆராய்வது மட்டுமல்லாது கல்வெட்டுப் படி எடுத்தல், கோயில்களைப் பாதுகாத்தல் போன்ற வெவ்வேறு பணிகள் உள்ளன, "தொல்லியல்" என்பது அகன்ற பொருள் தருகிறது; அதில் எல்லாவற்றை அடைக்கலாம். தொல் பொருள் ஆய்வு" குறுகலான வட்டத்திற்குள் நின்று விடுகின்றது, என்வே Archeology என்பதற்கு "தொல்லியல்" என்ற சொல்லையே பயன்படுத்துமாறு ஆட்சி மொழிக் குழுவை வேண்டுகிறோம்.

Archeology=தொல்லியல்
Archeometry=தொல் அளவையம்

—கொடியன்

# கல்வெட்டுப் படித்தல்

கு. தாமோதரன்

---

கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்ட பிறகு அது எந்த கோயிலில் எந்தச் சுவரில், எந்த ஊரில் படியெடுக்கப்பெற்றது என்பதையும், அவ்வூர் அமைந்துள்ள வட்டம், மாவட்டம் ஆகியவற்றையும், கல்வெட்டின் தலைப்புப் பகுதியின் பின்புறம் எழுதவேண்டும். அப்போது தான் ஒவ்வாரு கல்வெட்டு பற்றிய விபரமும் நமக்கு தெளிவாக விளங்கும். கல்வெட்டுப்படிகள் எடுத்தவுடன் அதை முடிவுப்பகுதியிலிருந்து கல்வெட்டு ஆரம்பிக்கும் பக்கத்திற்கு மடிக்கவேண்டும். அடுத்து கல்வெட்டுகளை படிப்பதற்கு வசதியாக ஒரு கயிற்றில் தொங்கவிட்டுக்கொள்ளவேண்டும். தொங்கவிட்டுக் கொண்ட பின் கல்வெட்டின் முதல் வரியிலிருந்து படிக்க ஆரம்பிக்க வேண்டும். இரண்டு மூன்று முறை படித்த பிறகு, கல்வெட்டில் எழுதப்பட்டுள்ளதைப் போன்று அப்படியே படித்து எழுத வேண்டும். எழுதும் போது ஒவ்வொரு வரியாக வரிசை எண் கொடுத்து எழுத வேண்டும். கல்வெட்டு முழுவதும் எழுதப்பட்ட பிறகு படித்துப்பார்க்க வேண்டும். அப்போது கல்வெட்டுகளில் தவறு இருந்தால் வெளிப்படும். மேலே புள்ளியுடன் எழுதப்பட வேண்டிய எழுத்துக்கள் பெரும்பாலும் புள்ளியின்றி எழுதப்படும். சில சமயங்களில் தேவையான எழுத்துக்கள் விடப்பட்டும் தேவை இல்லாத எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுமிருக்கும். தேவையான எழுத்துக்கள் விடப்பட்டிருந்தால் அந்த எழுத்தை [ ] இந்த அடைப்புக்குள் எழுத வேண்டும் கல்வெட்டுகளில் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துக்கள் தெரியாமல் இருந்தால் அவ்வெழுத்துக்களை (*) இந்த அடைப்புக்குள் எழுதவேண்டும். தேவையில்லாத எழுத்துக்கள் எழுதப்பெற்றிருந்தால் அவ்வெழுத்தை ( ) இக்குறியினுள் எழுதுதல் வேண்டும். பிறகு பொருள் நோக்கி படிக்க ஆரம்பிக்க வேண்டும்.

கல்வெட்டின் முதல் பகுதியில் மங்கலச்சொற்களுடன் கல்வெட்டுகள் ஆரம்பமாகும். ஸ்வஸ்திஸ்ரீ, ஸுபமஸ்து, அருளிச் செயல், நன்மங்கலஞ் சிறக்க என்ற வார்த்தைகள் முதலில் வரும். 'கொல்லம்' என்று ஆண்டைக் குறிக்கும் வகையில் கல்வெட்டு ஆரம்பமாவதும் உண்டு. இதன் பிறகு எந்த ஆண்டு கல்வெட்டு பொறிக்கப்பட்டது என்பதை கல்வெட்டு உணர்த்தும். குறிப்பாக இராஜராஜன், இராஜேந்திரன் கல்வெட்டுகளில் மெய்க்கீர்த்தி என்ற பகுதிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. மெய்க்கீர்த்தியில் அரசனுடைய வெற்றிகளும், இதர நிகழ்ச்சிகளும், குறிக்கப் படும். ஒவ்வொரு அரசனுக்கும் இந்த மெய்க்கீர்த்தி மாறுபடும். இராஜராஜன் மெய்க்கீர்த்தி, திருமகள் போலப்பெருநிலச் செல்வியும் என்று தொடங்கும். இராஜேந்திரனுடைய மெய்க்கீர்த்தி'' திருமன்னி வளர இரு நில மடந்தையும்'' என்று ஆரம்பிக்கும்

இதற்கு அடுத்து யாருக்கு யார் கொடைகொடுத்தார்கள் கொடையாகக் கொடுக்கப்பட்ட பொருள் யாது என்பது பற்றியசெய்திகள் பொறிக்கப்படும். கடைசிப்பகுதியில் கல்வெட்டை பொறித்தவர்களின் பெயர்கள் குறிக்கப்படும்.

கல்வெட்டு படிக்கப்பட்ட பிறகு அதனுடைய முழுக் கருத்தை ஆராய்தல் வேண்டும். இதை குறிப்புரை என்ற தலைப்பில் அரசனுடைய ஆண்டு, கொடுக்கப்பட்ட கொடையின் தன்மை, ஏதேனும் புதுக்கருத்துக்கள் இருப்பின் அதன் விளக்கம் ஆகியவற்றை எழுத வேண்டும். இந்த முறையிலேயே கல்வெட்டுகளைப் பதிப்பிக்க வேண்டும்.

முடிவு பெறாச் சொற்றொடராயினும், துண்டுத் துண்டுச் சொற்றொடரானாலும் அப்படியே பதிப்பிக்க வேண்டும். கல்வெட்டுகளின் மூலத்தை வெளியிடும் போது விருப்பு வெறுப்பின்றி உள்ளதை உள்ளபடி பதிப்பிக்கவேண்டும். கல்வெட்டுகளைப் பற்றிய ஆராய்ச்சி முறைகளும், ஆராய்ச்சியாளரின் கருத்துக்களும் தனியாக எழுதப்பட வேண்டும். *

---



கருவூர்த் தேவருடன் உரையாடும் இராஜராஜ சோழன்

# தொல் அளவையம் (Archeometry)

அகழ்வாய்வில் கண்டு பிடிக்கும் பொருள்களுடைய காலத்தை நாம் அறிந்தால்தான் வரலாறு அமைக்க முடியும். காலம் வரலாற்றுக்கு முதுகெலும்பு என்று கூறுவார்கள். ஆகவே அகழ்வாய்வில் கண்டு பிடிக்கும் பொருள்களுடைய காலத்தை கணிப்பதற்கு C 14 என்னும் கரித்துண்டுகளைக் கொண்டு காலத்தைக் கணிக்கும் முறை கையாளப்படுகின்றது.

இம்முறை அகழ்வாய்விற்கு எவ்வாறு பயன்படுகின்றது என்பதைக் காண்போம்

1968 ஆம் ஆண்டு தமிழ் நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத் துறையால் கொற்கையில் நடத்தப் பெற்ற அகழ்வாய்வில், கொற்கை 4 என்ற குழியில் 2.69 மீட்டர் ஆழத்தில் ஒரு அடுப்பு எரிக்கப்பட்ட தடயம் கணடு பிடிக்கப்பட்டது. அத்தடயத்திலிருந்து 10 கிராமிற்கு மேல் கரித்துண்டுகள் சேகரிக்கப்பட்டன. அக்கரித்துண்டுகளின் காலத்தையும், அவைகள் கிடைக்கப்பெற்ற பாள நிலையின் காலத்தையும் கணிக்கும் பொருட்டு, சேகரித்த கரித்துண்டுகள் பாம்பாயிலுள்ள டாட்டா இன்ஸ்டிடியூட் ஆப் பண்டமெண்டல் ரிசர்ச் என்ற ஆய்வு கூடத்திற்கு அனுப்பப் பட்டன. இக்கரித்துண்டுகளை பரிசோதித்த பிறகு, இவ்வாய்வுக் கூடம் இக்கரித்துண்டுகள் கி.மு. 785 ஆம் ஆண்டை சேர்ந்தவை என்று தெரிவித்தது. இதிலிருந்து இக்கரித்துண்டுகள் கிடைக்கப்

---

## வேடிக்கை

புலவர் பாடத்திட்டத்திலும், தமிழ் M A பாடத்திட்டத்திலும் கல்வெட்டு என்று ஒரு பாடம் உள்ளது. அதன் உண்மை நோக்கம் கல்வெட்டில் காணும் எழுத்துக்களை நேரடியாகப் படித்துப் புரிந்து கொள்ளப் பயிற்சி அளிப்பதாகத்தான் இருக்க முடியும். ஆனல் காலப்போக்கில் அது கனவாகி அச்சடித்த கல்வெட்டுக்கள் சிலவற்றையும், மெய்க்கீர்த்திகளையும் உருப்போட்டுத் தேர்வெழுதும் வகையில் தரம் தாழ்ந்து விட்டது

கல்வெட்டுப் பாடத்தில் இனிமேலாவது, படியெடுப்பதற்கும், தாமிழி, வட்டெழுத்து, கிரந்த எழுத்துக்களை நேரில் வாசிக்கும் பயிற்சி அளிக்கவும் ஏற்பாடு செய்யுமாறு தமிழகப் பல்கலைக் கழகங்களை வேண்டுகிறோம்,

—ஆசிரியர்

பெற்ற பாள நிலையின் காலம் கி.மு. 785 என்றும், அப்பாள நிலையில் (Strata) கிடைக்கப் பெற்ற கருப்பு சிவப்பு பானை ஓடுகளைக் கொண்டும் இன்னும் பிற பொருள்களைக் கொண்டும், கொற்கையில் கி.மு. 785 ஆம் ஆண்டிலேயே அங்கு மக்கள் வாழ்ந்திருந்தனர் என்றும், தமிழ் நாட்டில் பெருங்கற் துண்டுகளைக் கொண்டு இறந்தவர்களை அடக்கம்செய்யும் வழக்கம் கி.மு. எட்டாம் நூற்றாண்டிலிருந்தே இருந்து வந்தது என்றும் தெரிய வந்தது.

பொதுவாக உயிர் வாழும் எல்லா உயிரினங்களும் ஒரே விகிதத்தில் C 14 என்னும் கார்பனை தன்னகத்தே கொண்டுள்ளன. இவ்வுயிரினங்கள் இறந்தவுடன், இவைகளின் அங்ககப் பொருள்கள் (Organic materials) C 14 என்னும் கார்பனை ஒரே விகிதத்தில் இழந்து விடுகின்றன. இவைகளின் வாழ் நாளில் அரை பாகத்தில் சேர்த்துக் கொண்ட C 14 என்னும் கார்பனை இழக்க இவைகளுக்கு 5568 ஆண்டுகளாகும். அவைகள் இறந்த 5568 ஆண்டுகளுக்கு பிறகு தன்னிடத்தே சேகரித்து வைத்திருந்த C 14 என்னும் கார்பனின் $\frac{1}{2}$ பாகம் நீங்கி $\frac{1}{2}$ பாகம் மீதியாக இருக்கும். 11136 ஆண்டுகளுக்கு பிறகு $\frac{1}{2}$ பாகம் மீதியாக உள்ள கார்பனில் $\frac{1}{4}$ பாகம் நீங்கி $\frac{1}{4}$ பாகம் மீதியாக இருக்கும்.அவைகள் இறந்த 16704 ஆண்டுகளுக்குப் பிறகு $\frac{1}{4}$ பாகம் மீதியாக உள்ள கார்பனில் $\frac{1}{8}$ பாகம் நீங்கி $\frac{1}{8}$ பாகம் மீதியாக இருக்கும். 70000 ஆண்டுகளுக்குப் பிறகு C 14 என்னும் கார்பன் இறந்த அவைகளிடம் இருக்கவே இருக்காது.

ஆகவே இம்முறையின் மூலம் 70000 ஆண்டுகளுக்கு முன்பு உள்ள அகழ்வாய்வில் கிடைக்கப் பெற்ற பொருள்களின் காலங்களை சுலபமாக கணிக்கலாம்.

—அப்துல் மஜீத்

---

## 65 ஆண்டு ஆட்சி செய்தவன்

*பல்லவ மன்னர்களில் இரண்டாம் நந்திவர்மனே மிக அதிக காலம் அரசுக் கட்டிலில் இருந்தவன். கி பி 730 முதல் 795 வரை 65 ஆண்டுகள் ஆண்டான். தனது பனிரண்டாம் வயதிலேயே அரியணை ஏறினான்.*

# கோயில் பாதுகாப்பு

குடியிருக்கும் வீடுகளுக்குச் செய்ய வேண்டிய எல்லாப் பாது காப்பு முறைகளையும் கோயில்களுக்கும் கடைப் பிடிக்க வேண்டும். கட்டிடங்களின் மேல் கூரையில் புழுதி சேர்ந்து, மழை நீர் வரும் வழியை அடைக்காமல் அடிக்கடி சுத்தம் செய்ய வேண்டும். சிறு செடி கொடிகள் புல்பூண்டுகள் கட்டிடங்களின் எந்தப் பகுதியிலும் வளாராமல் பாதுகாக்க வேண்டும். அவற்றை இளையதில் களைவது எளிது. வளரவிட்டால் மெல்லக் கட்டிடத்தையே பிளந்து விடும்.



கூழம்பந்தல் கங்கை கொண்ட சோழீச்சுரம் நந்தி

கருங்கல் கட்டிடங்களுக்குச் சுண்ணும்பு பூசக் கூடாது. சுண்ணும்பிலுள்ள காரச் சத்து கருங்கல்லைக் காலப் போக்கில் பாதித்து விடும். வெள்ளை அடிப்பதால் கருங்கல்லில் செய்யப்பட்ட அழகு வேலைகள் மறைந்து, கலைக் காட்சியைக் அழித்து விடுகிறது பழைய கல்வெட்டுக்கள் இருந்தால் அவையும் மறைந்து விடுகின்றன.

கல்லோடு கல் இணையும் இசைகளுக்கு கலவை அடைத்து பூசக் கூடாது (Pointing). கருங்கல் இசை தெரியாவண்ணம் ஒன்றோடு நெருங்க இணைந்திருக்குமாதலால் சந்து அடைப்பு தேவையில்லாதது. மேலும் கலவை கருங்கல்லில் சரியாக ஒட்டா மல் அழகில்லாத தோற்றம் தரும்.

கட்டிடங்களில் அவ்வப்போது தோன்றும் வெடிப்புகளைக் கவனித்து, உடனுக்குடன் ஆவன செய்வது இன்றியமையாத தாகும்.

ஆயிரம் புதிய கோயில்கள் கட்டுவதை விட, ஏற்கனவே உள்ள பழைய கோயில்களை நல்ல முறையில் வைத்திருப்பது உத்தமம் என்று பெரியோர்கள் கூறிச் சென்றதை நினைவில் கொள்ள வேண்டும்.

—கொடுமுடி

# கல்வெட்டுகளைப் படி எடுக்க நான்காண்டுத்திட்டம்

தமிழகத்தில் சுமார் 80 ஆயிரம் கல்வெட்டுகள் இருப்பதாகத தோராயமாகக் மதிப்பிடப்பட்டுள்ளது. உண்மை எண்ணிக்கை இன்னும் அதிகமாக இருக்கும். ஆனல் அவற்றில் சுமார் 25000 கல்வெட்டுகள் மட்டும் படி எடுக்கப்பட்டுள்ளன. அச்சில் வந்தவை சுமார் 6000 தான். இருக்கும். கல்வெட்டுக்கள் நாள்தோறும் அழிந்து கொண்டே வருகின்றன. அவைகளை உரிய காலத்தில் படி எடுத்து வைக்காது போனல், சங்க இலக்கியங்களில் பல கிடைக்காமல் போனதற்கு வருந்திக் கொண்டிருப்பது போல கல்வெட்டுக்களையும் இழந்து விட்டு அதற்கும் வருந்த நேரிடும்.

தற்போது படி எடுக்கும் பணியில் மைசூரிலுள்ள கல்வெட்டுத் துறை ஈடுபட்டுள்ளது. ஆண்டுதோறும் எடுக்கும் கல்வெட்டுக்களின் குறிப்புரை மட்டும் வெளிவந்துள்ளன. அசல் வாசகம் வெளியிட முடிவதில்லை. அவை ஆராய்ச்சியாளர்களின் பார்வைக்குக் கிடைப்பதில்லை. அடுத்து தமிழ்நாடு அரசின் தொல்லியல்துறையும் படி எடுக்கும் பணியில் ஈடுபட்டுள்ளது. சென்னை நகரில் உள்ள எல்லா கல்வெட்டுக்களையும் படி எடுத்து அச்சிட்டு வெளியிட்டு உள்ளது. அடுத்து குமரி மாவட்டத்தில் உள்ள கல்வெட்டுகள் படி எடுக்கப்பட்டுள்ளன. அச்சிடும் பணி நடந்து கொண்டிருக்கின்றது விரைவில் விற்பனைக்குக் கிடைக்கும். தற்போதைய திட்டத்தின்படி மாவட்ட வாரியாகப்படி எடுத்து அச்சிடும் பணி நடந்து கொண்டிருக்கின்றது.

ஒரு மாவட்டத்துக் கல்வெட்டுக்களைப் படி எடுத்துப் பதிப்பிக்க இரண்டிற்கு மேற்பட்ட ஆண்டுகள் ஆகின்றன. இதன்படி, படி எடுக்கும் பணி முடிய ஐம்பது ஆண்டுகளுக்கு மேல் ஆகும். அதுவரை எல்லாக் கல்வெட்டுகளும் நல்ல நிலையில் இருக்குமென்று சொல்ல முடியாது.

எனவே போர்க் காலத்தில் செயல்படுவது போல ஒரு ''நான்காண்டு திட்டம்'' மிகவும் இன்றியமையாதது. தமிழ் நாடு அரசின் பலவேறு துறையினரின் உதவியோடு இதை நிறைவேற்றலாம். முக்கியமாக அறநிலையத் துறையினரின் பணியைப் பயன் படுத்திக் கொள்ளலாம்.

**முதல் ஆண்டு :** ஒவ்வொரு வட்டத்திற்கும் ஒருவர் வீதம் சுமார் 200 பேரைத் தேர்ந்தெடுத்து (கோயில் நிர்வாக அதிகாரி களையோ, பொதுப் பணித் துறை, நெடுஞ்சாலைத் துறைப் பொறியாளர்களையோ, பயன்படுத்திக் கொள்ளலாம்) கல்வெட்டுக் களைப் படி எடுப்பதில் ஒருவாரத் தீவிரப் பயிற்சி அளித்து, படி எடுக்கும் சாதனங்களையும் அளித்து, அவ்வத்துறை ஊழியர்களின் உதவிகொண்டு அந்தந்த வட்டத்திலுள்ள எல்லாக் கல்வெட்டுகளை யும் படி எடுத்து, ஊர் வாரியாகத் தொகுத்து அனுப்ப ஏற்பாடு செய்யலாம். இதனல் தமிழகத்திலுள்ள எல்லாக் கல்வெட்டுக் களின் படிகளும் கிடைத்து விடும். எடுக்கும் போதே இரண்டுபடி களாக எடுத்துக் கொண்டால் ஒப்பிட்டு உறுதி செய்ய உதவியாக இருக்கும்.

**இரண்டாம் ஆண்டு :** தற்போது நடந்து முடிந்த பயிற்சிப் பாசறையில் கலந்து கொண்ட 40 ஆசிரியப் பெருந்தகைகளும் நமது பழைய எழுத்துக்களை வாசிக்கும் திறமை பெற்றுள்ளனர். இதே போல இன்னும் ஒரு சில பாசறைகளை நடத்தி பழைய எழுத்துக்களை வாசிப்போர் எண்ணிக்கையைப் பெருக்கி அவர் களின் ஓய்வு நேரப் பணியைப் பயன் படுத்திக் கொள்ளலாம்.

ஒவ்வொரு வட்டத்திற்கும் ஒருவர் வீதம் தேர்ந்தெடுத்து, கல்வெட்டுப் படிகளை வாசித்து அசல் வாசகம் தயாரித்துத் தர ஏற்பாடு செய்யலாம். உழைப்பிற்கேற்ற ஊதியம் தந்து ஊக்குவிக் கலாம். அவர்கள் தயாரிக்கும் வாசகத்தை தொல்லியல் துறை மூலப் பிரதியோடு ஒப்பிட்டுச் சரிபார்த்து கையெழுத்துக் ஏடுகள் (Manuscripts) தயாரித்துக் கொள்ளலாம்.

**மூன்ரும் ஆண்டு :** கல்வெட்டுக் கையெழுத்து ஏடுகளை நூலாக அச்சிடுவது பெரும்பாடு. ஏராளமான செலவு ஆகும். இருந்தாலும் தமிழ் நாட்டு வரலாறு முழுமையடைய வேண்டுமானல் கல் வெட்டு மூலத்தை மட்டுமாவது அச்சிட்டே ஆகவேண்டும். ஆராய்ச்சி செய்வோர் படித்து அறிந்து கொள்ள கல்லூரி நூலகங்களிலும், பொது நூலகங்களிலும் கட்டாயம் இருக்க வேண்டும்.

அச்சிடுவதை ஒரு நீண்ட காலத் திட்டமாக வைத்துக் கொண்டு கொஞ்சம் கொஞ்சமாகவும் செய்யலாம். ஆனல் அச்சுக்குப் பதிலாக ஏதாவது ஒரு மாற்று ஏற்பாடு செய்ய வேண்டும். சென்னையில் உள்ள பல்வேறு அலுவலகங்களிலும் உள்ள தமிழ் தட்டச்சுப் பொறிகளையும், தட்டச்சர்களையும் சுமார் 10 பொறிகள் ஆண்டு முழுவதும் தொடர்ந்து இயங்கும் வண்ணம் முறை போட்டு வரவழைத்து, ஒரு இடத்தில் அமர்த்தி சைக்ளோஸ்டைல் செய்து கொள்ளலாம். சுமார் 200 பிரதிகள் எடுத்துக் கொண்டால் எல்லாக் கல்லூரிகளும் விலை கொடுத்து வாங்கிக் கொள்ள வசதியாகும். கல்வெட்டுகள் பெரும்பாலும் கோயில்களிலிருந்து எடுக்கப்படுவதாலும் கோயில் செய்திகளைத் தருவதாலும் சைக்ளோஸ்டைல் செய்த பிரதிகளை அச்சிடும் பொறுப்பை அந்தந்தக் கோயில் நிர்வாகமே ஏற்றுச் செய்ய ஆணை யிட்டால் அத்தனை கல்வெட்டுகளும் விரைவில் அச்சாகிவிடும்:

**நான்காம் ஆண்டு :** கடந்த மூன்று ஆண்டுகளிலும் நடந்தவை களை ஆராய்ந்து எஞ்சியதை முடிக்க வேண்டும்.

தமிழ் வளர்ச்சியே உயிர் மூச்சாகக் கொண்டுள்ள கலைஞரின் அரசு தற்போதே இப்பணியை எடுத்துச் செய்யுமென்று நம்பு கிறோம். தொல்லியல் துறை இயக்குநரின் மேற் பார்வையில் போர்க்கால அவசரத்தோடு இப்பணியை முடிக்க வேண்டியது இன்றியமையாததாகும். இத்திட்டத்தால் தெளிவடையும் தமிழ வரலாற்றிற்கு இணையாக இஞ்ஞாலத்தையே கொடுத்தாலும் போதாது எனில் ஆகும் செலவு கண்டு அஞ்சலாமா ?



கி.பி. எட்டாம் நூற்றாண்டுப் பணி
நாமக்கல் குகைத்தளிச் சிற்பம், அதிகமான் செதுக்கியது,

# சிந்துவெளி எழுத்துகள்

# புதிர் அகல ...... ?

இன்றைக்கு 4000 ஆண்டுகளுக்கு முற்பட்ட சிந்துவெளி மக்கள் பேசிய மொழி திராவிடச் சார்புடையது என்று ஈராஸ் பாதிரியார், சர். ஜான் மார்ஷல் முதலாகப் பல அறிஞர்கள் கருதுகின்றனர். அண்மையில் பின்லாந்து அறிஞர்களும் ரசிய அறிஞர்களும் தனித்தனியே ஆராய்ந்து, சிந்துவெளி எழுத்துக்கள் திராவிட இனத்தைச் சேர்ந்ததாக இருக்கலாமென்று முடிவுக்கு வந்துள்ளார்கள். பாரதப் பேரரசு Nehru Fellowship என்ற பெயரில் திரு ஐராவதம் மகாதேவன் அவர்களை இப்புதிரை விடுவிக்கும் பணியில் ஈடுபடுத்தியுள்ளது.

சிந்துவெளி எழுத்துக்கள் சித்திரவடிவானவை. வலது பக்கத்திலிருந்து இடது பக்கம் எழுதப்படுபவை. அச்சித்திரங்களின் பெயர்களைத் தொடர்ந்து எழுதினுல் பொருள் தரும் சொற்றெடர் கிடைக்குமாறு அமைந்தவை. அந்தச் சொற்கள் பழைய திராவிடச் சொற்களாக இருக்கவேண்டும். இது தவறி அறியுமுறையினுலேயே (Trial & error) கண்டுபிடிக்க இயலும். தமிழகத்திலுள்ள எல்லாத் தமிழர்களும் படத்தைப் பார்த்து அதன் பெயர் கூற முயன்றுல் ஒன்றிரண்டு பொருத்தமாக அமையலாம். அதைக் கொண்டுதான் படிப்படியாக முன்னேற வேண்டும். எப்படியும் சிந்துவெளி எழுத்துக்களின் புதிர் தமிழகத்தில்தான் தெளிவடையும் என்பது திண்ணம்.

சிந்துவெளி எழுத்துக்கள் பெரும் புதிராகத் தெரிவதன் கராணம் அதன் விவரங்கள் திரளாக ஒரு இடத்தில் கிடைக்காதது தான். அனைத்துலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றம் அண்மையில் இது பற்றிய கட்டுரைகள் சிலவற்றைத் தொகுத்து வெளியிட்டுள்ளது

1. இதுவரை கிடைத்துள்ள எழுத்துக்களின் படங்கள்,

2. பின்லாந்து அறிஞர்கள் கணக்கிட்டுள்ளபடி ஒவ்வொரு எழுத்துக்களும், எங்கெங்கு எத்தனை முறை வருகின்றன போன்ற புள்ளி விவரங்கள்,

3. ஒரு சிறு முன்னுரை கொண்ட எளிய நூல் ஒன்று வெளியிட்டால் எல்லாத் தமிழர்களும் முயற்சி செய்ய ஏதுவாகும் (தற்போதுள்ள நிலையில் அறிஞர்களே அருகில் செல்ல அஞ்சுகின்றனர்)

தமிழ்த்தாயின் மூத்த மகன் பேரறிஞர் அண்ணு அவர்கள் பெயரில் ஒரு அறக்கட்டளை அமைத்து, அவ்வப்போது வெளியாகும் கருத்துக்களை ஒன்று திரட்டி, பல பல கருத்தரங்குகள் கூட்டி, வெற்றிகிட்டும் வரை முயலும் தீவிரத் திட்டமொன்றுக்கு வழிவகுக்க வேண்டியது அரசின் கடமையாகும். * *

# கையெழுத்து நூலகம்

சென்னை மாவட்ட நூலக ஆணைக் குழுவின் உறுப்பாக நான்கு மண்டல நூலகங்கள் கட்ட உத்தேசிக்கப்பட்டுள்ளதாக, சாஸ்திரி நகர் மண்டல நூலகத்தின் கால்கோள் விழாவில் சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்கள் கூறினர்கள். ஆராய்ச்சிப் பணி களுக்குப் பயன்படும் வகையில் வள்ளுவர், பாரதி ஆகியோரைப் பற்றிய எல்லா விவரங்களும் சேகரித்து வைக்கப்படும் என்று அறிவித்தார்கள்.

இன்றைய இளைஞர்கள் ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு பல புதிய உண்மைகளைக் கண்டுள்ளனர். வரலாற்றில் புதிய, புதிய தகவல் சேர்த்துக் கொண்டுள்ளனர். ஆனல் அவற்றை வெளியிட பத்திரிக்கை வசதி இல்லை. தமிழகத்தில் ஆராய்ச்சிக் கருத்துக்களை வெளியிட ஒரு ஏடு கூட முன் வராத நிலைமை நமது பிற்போக்குத் தன்மைக்குச் சான்று. அறிவியலைத் தமிழில் எழுதித் தர விழை வோரும், இவ்வாறேவெளியிடப்பத்திரிக்கை இன்றி வாடுகின்றனர். நல்லகட்டுரைகள் வரும் ஏடுகள் விற்பனையாகாமல் நின்று விடுவ தால், ஏடுகளை நொந்து கொண்டும் பயனில்லை.

இக்குறை தீர ஒரு மண்டல நூலகத்தைக் ''கையெழுத்து நூலகமாக'' அமைக்கலாம் என்று பரிந்துரைக்கிறேம். ஆராய்ச்சி யாளர்கள் தங்கள் கட்டுரைகளைச் சுத்தமாக டைப் செய்து அல்லது தெளிவாக எழுதி பைண்டு செய்து இந்நூலகத்தில் ஒப் படைக்க வேண்டும். நூலகர் அதைப் பெற்றுக் கொண்டு தேதி யிட்ட சான்றிதழ் ஒன்று வழங்க வேண்டும். கண்டு பிடிக்கப் பட்ட காலத்தை அறிய இது உதவும். இதனல் ஒருவர் கண்டதை, அடுத்தவர் கண்டதாக வெளியிட இயலாது. நூல்களைப் பொருள் வாரியாகத் தொகுத்து அவ்வப் போது பட்டியல் வெளியிட வேண்டும்.

ஆராய்ச்சியாளர்கள் இந்நூலகத்தில் வந்து அவ்வத்துறையில் இதுவரை வந்த ஆய்வு முடிவுகளை அறிந்து மேலே ஆராய உதவும். ஆராய்ச்சிக் கட்டுரைகளில் காட்டப்படும் பார்வைக் குறிப்புகள், பதிப்பிக்கப்பட்ட நூல்களிலிருந்தே காட்டவேண்டும் என்பது மரபு. ஆனல் இந்தக் கையெழுத்து நூலகத்திலுள்ள நூல்களுக்கு அத்தகுதியை சிறப்பாக அளித்து ஏற்றுக் கொள்ளலாம்.

இதனால் தாம் கண்டதைப் பிறர் காண வழி ஏற்பட்டுள்ளது என்ற மன நிறைவு இளைஞர்களிடையே ஏற்படும். புதிய புதிய நூல்கள் எழுதிச் சேர்க்க ஊக்கம் பிறக்கும். நூலின் தகுதியை அறிந்து, பதிப்பிக்க விரும்புவோர் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

இக்கையெழுத்து நூலக முறை பல்கலைக் கழகங்களில் உண்டு. டி. எஸ். எஸ்., எம் லிட்., டாக்டர் போன்ற படிப்புகளுக்கான ஆராய்ச்சிக் கட்டுரைகளைப் பல்கலைக் கழகங்கள் பாதுகாத்து வைக்கின்றன. பொதுமக்களில் ஆய்வுள்ளம் கொண்டவர்களுக்காக "கையெழுத்து நூலகம்" அமைப்பது மிகவும் இன்றியமையாது

நூலகத் துறையில் புதுப் புதுச் சாதனைகளை அள்ளித் தரும் சிலம்புச் செல்வர் அவர்களின் தலைமையில் இயங்கும் சென்னை மாவட்ட நூலக ஆணைக் குழுவை, சென்னை மாவட்டத்தில் அமைக்கப் போகும் நான்கு மண்டல நூலகங்களில் ஒன்றை கையெழுத்து நூலகமாக அமைக்குமாறு, கொங்கு பணிந்து வேண்டுகிறது.

---

# சூரியகாந்திப் பூ

செடி, கொடி, மரங்களின் வேர் நுனியிலும் தண்டு வலையிலும் ஆக்சின் (Auxin) என்ற இயக்கு நீர் (Hormoue) இருக்கிறது. இது அப்பகுதிகளின் வளர்ச்சிக்குக் கா ணமாக இருக்கிறது. ஆக்சின் உள்ள பகுதியில் ஒளி பட்டால் அவ்வியக்கு நீர் விலகிச் சென்று விடும். எனவே அங்கு வளர்ச்சி குன்றும், இதன் அடிப்படையில் தான் சூரிய காந்திப் பூ கதிரவனை நோக்கியே மலர்ந்திருக்கிறது. காலையில் கதிரவனின் ஒளி பூக் காம்பின் நுனியில் படுகிறது. ஒளியின் அடர்வு கீழ்த்திசையில் மிகுந்தும் மேல் திசையில் குறைந்தும் காணப்படும். எனவே ஒளி குறைந்த பகுதியில் மிகுதியாகவும் ஒளி மிகுந்த வளர்ச்சி பகுதியில் வளர்ச்சி குறைவாகவும் ஏற்படுவதால் தண்டின் நுனியில் உயர வேறுபாடு தோன்றுகிறது. பூ கீழ் நோக்கிச் சாய்கிறது. அவ்வாறே மாலையில் மேற்கு திசை நோக்கித் திரும்புகிறது. நடுப் பகலில் கதிரவனின் ஒளி ஒரே சீராகப் பூக் காம்பின் மீது விழுவதால் பூ நேராக நிமிர்ந்து கதிரவனை நோக்கி இருக்கிறது.

இரா. சந்திரசேகரன்

# பாசறை மறவர்

1. எஸ். அசோகன், அரசர் கல்லூரி, புதுக்கோட்டை
2. மா. இரா. அரசு, 1/15 இப்ரகிம் சாகிபு முதல்சந்து, சென்னை-1
3. மு. வை. அரவிந்தன், அரசினர்கல்லூரி, வேலூர் (வ. ஆ)
4. எஸ். அருள்மரியதாசு, தூய கபிரியேல் உயர்பள்ளி,சென்னை-1
5. க. ப. அறவாணன், பச்சையப்பன் கல்லூரி, சென்னை-30
6. எம். அஜிமா பேகம், வெ. செ. உயர்பள்ளி, திருவொற்றியூர்
7. செ. இராதாகிருட்டிணன்,அரசினர் கல்லூரி, கும்பகோணம்
8. ஏ. எக்ஸ். பி. இராயன், இ. எல். எம். பெபிரீசியசு உயர்பள்ளி, சென்னை-7
9. சீ. இலட்சுமணன், அரசுயர்பள்ளி, சிங்கம்புணரி
10. மா. இரா. இளங்கோவன், புதுக்கல்லூரி, சென்னை.
11. எஸ். உமாமகேசுவரி, வ. பெ. உயர்பள்ளி,குலசேகரப்பட்டணம்
12. முத்து. எத்திராசன், ஒ. மு. உயர்பள்ளி, சென்னை-1
13. யு. ஆர். கணேசன், இராசா முத்தையா உயர்பள்ளி, சென்னை-28
14. வி. சி. கனகசபாபதி, அரசுயர்பள்ளி, குருவராயப்பேட்டை
15. ஏ. கிருட்டிணமூர்த்தி, ஈ. வெ. ர. கல்லூரி, திருச்சி.
16. தி. கிருட்டிணமூர்த்தி, இராணி மெய்யம்மை உயர்பள்ளி, சென்னை-20
17. அ. குப்பண்ணன், அரசுயர்பள்ளி, சங்ககிரி
18. இரா. குமரவேலன், பச்சையப்பன் கல்லூரி, சென்னை-30
19. கோகிலா சார்லஸ், மாநகராட்சி உயர்பள்ளி, சென்னை-1
20. கோ. சண்முகம், அரசுயர்பள்ளி, மேல்மாயில்
21. நா. சண்முகம், மாநகராட்சி உயர்பள்ளி, சென்னை.12
22. கா. சி. சதாசிவம், அரசுயர் பள்ளி, சதுரங்கப்பட்டினம்
23. துரை. சரோசா, வெலிங்டன் சீமாட்டி உயர்பள்ளி,சென்னை-5

24. எஸ். ஜே. சாஸ்வதானந்தா, செயின்ட் ஜோசப் ஆங்கிலோ இந்தியன் உயர்பள்ளி, சென்னை-26

25. ம. சிவசிதம்பரம், ஆதம்பாக்கம், சென்னை-16

26. சு. சிவராமகிருட்டிணன், மாநகராட்சி உயர்பள்ளி, சென்னை-4

27. சே. சுந்தரராசன், தூய அந்திரேயர் உயர்பள்ளி அரக்கோணம்

28. இரா. செங்கல்வராயன், அரசுயர்பள்ளி தொழுப்பேடு

29. ச. செல்லப்பெருமாள், மாநகராட்சி உயர்பள்ளி சென்னை-4

30. கே. சேசாத்திரி, மதுரைக் கல்லூரி, மதுரை-11

31. கே. ஈ. சேசாத்திரி, குண்ணவாக்கம்

32. சி. சொக்கலிங்கம், அரசுயர்பள்ளி, கல்லப்பாடி

33. மு. தேவராயன், அரசுயர்பள்ளி, பாலக்கோடு

34. எம். கே. நடராசன், அரசுயர்பள்ளி, மதுரமங்கலம்

35. கு. நம்பி ஆரூரன், மாநிலக்கல்லூரி, சென்னை-5

36. யூ. ஆர். நரசிம்மன், S. S. V. உயர்பள்ளி, கொடுமுடி.

37. அ. நாகலிங்கம், பல்கலைக்கழகம், சென்னை-5

38. கு. நாராயணபாரதி, இந்துக்கல்லூரி, சென்னை-55

39. ந. பத்திராசலம், அரசுயர்பள்ளி, தச்சூர்

40. அ. பாஸ்கரபால் பாண்டியன், ஆதித்தனர் கல்லூரி, திருச்செந்தூர்

41. வே. மகாதேவன், புனிதசூசைப்பர் உயர்பள்ளி, செங்கல்பட்டு

42. மங்கலமன்னன், அரசுயர்பள்ளி, சென்னை-44

43. எஸ். முத்தையன், மாநகராட்சி (மகளிர்) உயர்பள்ளி, சென்னை-29

44. பி. கே. வரதராசன், அரசுயர்பள்ளி, நாகரசம்பட்டி

45. மது. ச. விமலானந்தம், மாநிலக்கல்லூரி. சென்னை-5

46. செ. இராசு, C. S. I. உயர்பள்ளி, ஈரோடு-1

ஆசிரியர், கொங்கு.